[5th September 1958

**Sri P. G. MANICKAM :** கடைநிலை ஊழியர்களாக கிராமங்களில் வேலை புரிந்துவரும் வெட்டியான் போன்ற சிப்பந்திகள் கந்தாயம் வசூலிப்பதற்கு கிராமம் கிராமமாகச் செல்லவேண்டிய அவசியம் இருப்பதால் அவர்களுக்கும் சைக்கிள் வாங்கிக்கொள்வதற்கு கடனாகத் தொகை கொடுக்கப்படுகிறதா ? அப்படி இல்லையென்றால் இனிமேலாவது கடனாகக் கொடுத்து உதவ சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித் தனியாக தலையாரி போன்றவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமத்திற்குப் போக வேண்டிய அவசியம் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM :** மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுப்பதுபோல உடனடியாகப் பஞ்சப்படி இங்கும் வழங்குவது சாத்தியம் இல்லையென்று சொன்னார்கள். எப்பொழுது சாத்தியமாகும் ? அதற்காக எவ்வளவு தொகை செலவாகும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கணக்கு பார்த்தால், இப்போது 12 ரூபாய் கொடுத்தோம். அதன் காரணமாக $4\frac{3}{4}$ கோடி செலவாகிறது. அதிலிருந்து கணக்குப் போட்டுக்கொள்ளலாம். இப்போது இருக்கிற அளவை உயர்த்தி மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுப்பது போல கொடுக்கவேண்டுமென்றால் இன்னும் $5\frac{1}{2}$ கோடிக்கு மேல் செலவாகும்.

**Sri K. ANBAZHAGAN :** கெஜெட் பதிவு இல்லாத கடைநிலைப் பட்ட சிப்பந்திகள் இன்னும் வேலை உறுதி செய்யப்படாமல், காயம் செய்யப்படாமல் இருக்கிறார்கள். பலமுறை அரசாங்கத்தாரிற்கு விண்ணப்பித்துக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்கள் குறை கவனிக்கப்பட்டதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** A separate question may be put.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** கனம் தலைவர் அவர்களே, இப்போது சம்பள உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிற பட்டியலில் கிராம அதிகாரிகள்—கர்ணம், தலையாரி, தோட்டிகள்—முதற்கொண்டு சேர்க்கப்பட்டிருக்கிறார்களா ? அவர்களுடைய பிரச்னையும் பரிசீலிக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அவர்களுக்குத் தனியாகச் சம்பள உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த 12 ரூபாய் கொடுக்கவில்லை. கர்ணத்திற்கு 7 ரூபாயும், இதர வில்லேஜ் ஆபீசர்களுக்கு 5 ரூபாய் உயர்வு கொடுக்கப்பட்டிருப்பதாக நான் நினைக்கிறேன்.

**Sri A. GOVINDASAMI :** இரண்டாவது பே கமிஷனுடைய அறிக்கையை எதிர்ப்பார்ப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அந்த அறிக்கை வெளிவந்தவுடனே உடனடியாக அது அமூலாக்கப்படுமா ? அல்லது மீண்டும் அது பரிசீலனை செய்யப்பட்ட பிறகு தான் அமூலாக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதில் என்ன சொல்லப் போகிறார்கள் என்பது தெரியாமல் அப்படியே அமூல் செய்யப்படும் என்று எவ்வாறு சொல்லமுடியும் ? அந்த அறிக்கையைப் பரிசீலனை செய்த பிறகு தான் முடிவு எடுக்கப்படும்.

*Drinking water*

* 57· *Q*—**Sri M. C. MUTHUKUMARASWAMY :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயதுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவிலுள்ள தானாக இயங்கும் **(automatic)** குடி தண்ணீர் பம்பு செட்டுகள் எத்தனை ?

(ஆ) அவைகளுக்காகச் செலவிட்ட தொகை எவ்வளவு ?

5th September 1958]

(இ) அவைகளில் எத்தனை—

(1) முனிசிபாலிடிகளிலும்,

(2) முதல் தர பஞ்சாயத்துக்களிலும் இயங்குகின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 50 (fifty).

(*b*) Rs. 2,86,580.

(*c*) (1) 2 (two) in municipalities.

**(2) 25 (twenty-five) in major panchayats.**

SRI M. C. MUTHUKUMARASWAMY : சார், தனியாக இயங்கும் பம்பு செட்டுகள் உள்ள இடங்களில் எல்லாம் நல்ல வசதி உள்ளவர்கள் இருக்கிறார்கள். குடிதண்ணீருக்கு வேண்டிய கிணறுகளும் அங்கே கட்டப்பட்டிருக்கின்றன. இதற்காகப் பத்துப் பதினைந்தாயிரம் ரூபாய்க்கு மேலும் செலவாகிறது. அநேகம் கிராமங்களில் உள்ள சேரி மக்கள் குடிப்பதற்கு கூடத் தண்ணீர் இல்லாமல்—கிணறுகள் கூட இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே முதலில் குடிப்பதற்குக் கிணறுகளாவது இந்தப் பகுதிகளில் வெட்டிக் கொடுத்து உதவி செய்யும் வரையில் தானாக இயங்கும் பம்பு செட்டுகளை வசதி உள்ள இடங்களில் வைப்பதைக் கொஞ்சம் தள்ளி வைப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது குடிதண்ணீர் வசதி இல்லாத இடங்களுக்குக் குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்கப் படுகிறது. எல்லா இடங்களுக்கும் ஒரே சமயத்தில் கொடுக்க முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் எல்லா இடங்களுக்கும் வசதி செய்து கொடுக்கப்படும்.

SRI K. B. S. MANI : தானாக இயங்கும் குடி தண்ணீர் பம்பு செட்டுகள் முனிசிபாலிடிகளில் வாங்கி வைக்கப்பட்டிருக்கின்றன. தஞ்சை ஜில்லாவில் உள்ள தானாக இயங்கும் குடிதண்ணீர் பம்பு செட்டுகள் மொத்தம் 50 என்று கனம் அமைச்சர் தமது பதிலில் கூறினார். அவைகளில் கிட்டத் தட்ட 40-க்கு மேற்பட்டவை பெரும்பாலும் வேலை செய்யாமல் இருக்கின்றன. அவைகள் பி. எஸ். ஜி. பம்பு செட்கள். ரீடா பம்பு செட்டுகள் என்ற பம்பு செட்டுகள் நல்ல பம்பு செட்டுகளாக இருக்கின்றன. அவைகள் குறைந்த விலைக்குக் கிடைக்கின்றன. அவைகளை உபயோகித்தால் மின்சாரமும் மிச்சமாகிறது. அவைகள் தஞ்சாவூரிலேயே கிடைக்கின்றன. அவைகளை உபயோகிக்க அனுமதித்தால் தஞ்சாவூரிலுள்ளவர்கள் உள்ளூரிலேயிருந்து பம்பு செட்டுகளை வாங்கிக் கொள்ளும் சௌகரியத்தை அடைவார்கள். ஆகவே சர்க்கார் ரீடா பம்பு செட்டுகளை பரிட்சார்த்தமாக உபயோகித்து, பலன்களை அறிந்து அந்த பம்பு செட்டுகளை உபயோகிப்பதற்கு உத்தரவு போடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த அரிய யோசனையை கனம் அங்கத்தினர் எழுத்து மூலம் தெரிவித்தால் அதை கவனிக்கிறோம்.

*Spinning mills*

* 58 *Q*.—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of spinning mills in the State ;

(*b*) the quantity of yarn produced from these mills in 1957–58;

(*c*) the quantity consumed by handlooms and powerlooms in 1957–58 ;